# □□□□ □□□□□□□

# JavaScript


## □□.□□□□□□

nithyadurai87@gmail.com



மின்னூல் வெளியீடு :

கணியம் அறக்கட்டளை

kaniyam.com

அட்டைப்படம், மின்னூலாக்கம் :

பிரசன்னா udpmprasanna@gmail.com



JavaScript என்பது இணையப் பக்கங்களை உருவாக்கும் ஒரு கணினி மொழி. இதை, இந்த நூல் எளிமையாக அறிமுகம் செய்கிறது.

தமிழில் கட்டற்ற மென்பொருட்கள் பற்றிய தகவல்களை “கணியம்” மின் மாத இதழ், 2012 முதல் வெளியிட்டு வருகிறது.இதில் வெளியான JavaScript பற்றிய கட்டுரைககளை இணைத்து ஒரு முழு புத்தகமாக வெளியிடுவதில் பெரு மகிழ்ச்சி கொள்கிறோம்.

உங்கள் கருத்துகளையும், பிழை திருத்தங்களையும் editor@kaniyam.com க்கு

மின்னஞ்சல் அனுப்பலாம்.

http://kaniyam.com/learn-javascript-in-tamil என்ற முகவரியில் இருந்து இந்த நூலை பதிவிறக்கம் செய்யலாம். உங்கள் கருத்துகளையும் இங்கே பகிரலாம்.

படித்து பயன் பெறவும், பிறருடன் பகிர்ந்து மகிழவும் வேண்டுகிறோம்.

கணியம் இதழை தொடர்ந்து வளர்க்கும் அனைத்து அன்பர்களுக்கும் எமது நன்றிகள்.

த.சீனிவாசன்

tshrinivasan@gmail.com

ஆசிரியர்
கணியம்

editor@kaniyam.com





நூல் மூலம் :

http://static.kaniyam.com/ebooks/Learn-Javascript-in-Tamil.odt





# □□□□□□□□ □□□

அழகான, பல்வேறு வசதிகள் கொண்ட இணைய தளங்களை உருவாக்க HTML, CSS, JavaScript, Jquery ஆகிய நுட்பங்களை அடிப்படை. இவை பற்றி நான் கற்றவற்றை கணியம் இதழில் தொடராக எழுதினேன். அவை மின்னூலாகவும் வெளிவருவது மகிழ்ச்சி. எங்கள் திருமண நாளான இன்று இந்த மின்னூல் வெளிவருவது கூடுதல் மகிழ்ச்சி.

தமிழில் கணிணி நுட்பங்களைப் பகிர, ஒரு களமாக உள்ள 'கணியம்' தளத்தில், இதுவரை வெளியான எனது மின்னூல்களுக்கு வாசகர்கள் தரும் ஆதரவு பெருமகிழ்ச்சி அளிக்கிறது.

"தேமதுரத் தமிழோசை உலகெல்லாம் பரவும் வகை செய்தல் வேண்டும்"
"பிற நாட்டு நல்லறிஞர் சாத்திரங்கள் தமிழ் மொழியிற் பெயர்த்தல் வேண்டும்"

என்ற பாரதியின் விருப்பங்களை நிறைவேற்றுவதில், என் பங்களிப்பும் உள்ளது என்பதே, மிகவும் மகிழ்ச்சி.

தொடர்ந்து ஊக்கம் அளிக்கும் என் குடும்பத்தினருக்கும், கணியம் குழுவினருக்கும், FreeTamilEbooks.com குழுவினருக்கும், வாசகர்களுக்கும் நன்றிகள்.

# [illegible]

---

இந்த நூலில் உள்ள HTML உதாரணங்கள் யாவும் https://gist.github.com/nithyadurai87 இங்கே உள்ளன.

□□□□□□□□□□□□□

# JavaScript – □□□□□□□□

JavaScript என்பது ஒரு தனிப்பட்ட நிரலாக்க மொழி கிடையாது. இது html மற்றும் java போன்ற மொழிகளுடன் இணைந்து பயன்படுத்தப்படும் interpreted நிரலாக்க மொழி ஆகும். இது எனவே இதனைக் கற்பதற்கு முன்னர் ' **HTML**' எனும் புத்தகத்தை நன்கு படித்து விடவும். அப்போதுதான் உங்களால் இந்தப் புத்தகத்தில் இடம் பெற்றுள்ள அனைத்தையும் சுலபமாகப் புரிந்து கொள்ள முடியும்.

இது ஒரு Client side scripting language ஆகும். அதாவது வலைத்தளத்தைப் பயன்படுத்தப் போகும் பயன ருடன் தொடர்பு கொள்வதற்கு சிறந்த மொழி. IE, chrome, firefox போன்ற அனைத்து உலாவிகளிலும் இது சிறப்பாகச் செயல்படும். Javascript எப்போதும் HTML program-ன் ஒரு பகுதியாகவே உலாவிகளுக்கு அறிமுகப்படுத்தப்படும். உலாவிகலும் இத்தனை ஒரு HTML program போலவே இயக்கும். எனவே இதற்கென்று தனியாக ஒரு அமைப்பு முறையோ, சேமிப்பு முறையோ கிடையாது.

படிவத்தைப் பூர்த்தி செய்யும் பயனர்கள் இடையில் ஒரு பொத்தானை சொடுக்கும்போதோ அல்லது ஒரு இணைப்பினை சொடுக்கும்போதோ, ஏதோ ஒன்று நிகழும் வகையிலேயே Javascript-ஆனது எப்போதும் எழுதப்படும். அதாவது பயனர்கள் நிகழ்த்தும் விஷயங்களாகவே இது அமையும். எனவே Animation, Multimedia போன்ற இடங்களில் இது பெரிதும் பயன்படும்.

# JavaScript -□□ □□□□□□□

<script> tag-ன் பண்புகளான language, type மூலம் நமது javascript-ஆனது html மொழியுடன் இணைக்கப்படுகிறது. இந்த <script>-ஐ html-ல் எங்கு வேண்டுமானாலும் பயன்படுத்தலாம். பொதுவாக <head>-க்குள் காணப்படும். கீழ்க்கண்ட எடுத்துக்காட்டில் <body>-க்குள் பயன்படுத்தியுள்ளோம்.

ஒரு வாக்கியத்தினை வெளிப்படுத்துவதற்கான javascript நிரல் பின்வருமாறு அமையும். இந்த நிரலை gedit அல்லது notepad-ல் எழுதி ஒரு html program-ஐ எவ்வாறு சேமிப்போமோ அவ்வாறே இதனையும் சேமிக்க வேண்டும் .

(Sample.html)

```
<html>
  <body>
    <script language="javascript" type="text/javascript">
      <!--
        document.write("This book will teach you about JavaScript!")
      //-->
    </script>
  </body>
</html>
```

HTML-ன் பழமையான பதிப்புகளில் language=”javascript” type=”text/javascript”

எனும் இரண்டு பண்புகளையும் வெளிப்படையாகக் கொடுக்க வேண்டும். அப்போதுதான் உலாவியானது இதனை javascript-ஆக ஏற்று செயல்படும். ஆனால் தற்போதைய பதிப்புகளில் (XHTML மற்றும் இதையடுத்து வந்தவை) type=”text/javascript” எனும் ஒரு பண்பினை மட்டும்  கொடுத்தால் போதுமானது. Language எனும் பண்பினை கொடுக்கத் தேவையில்லை.

அடுத்தபடியாக <script> -க்குள் கொடுக்க வேண்டிய விஷயங்கள் அனைத்தையும் எதற்காக <!– மற்றும் //–> எனும் குறியீடுகளுக்குள் கொடுத்துள்ளோம் என்பதே நீங்கள் முக்கியமாகத் தெரிந்து கொள்ள வேண்டும். இவை இரண்டும் ஒரு பின்னூட்டத்துக்கான (comment) தொடக்கம் மற்றும் முடிவினைக் குறிக்கும் குறியீடுகள் ஆகும். சிலசமயம் javascript-ஐ அடையாளம் கண்டு கொள்ளத் தெரியாத உலாவிகளில் இத்தகைய நிரல்கள் இயங்கும்போது, உலாவியானது குழம்பி ஏதோ தவறு எனும் செய்தியை வெளிப்படுத்தும். இதுவே அவையெல்லாம் ஒரு பின்னூட்டக் குறியீட்டுக்குள் கொடுக்கப்பட்டிருப்பின்  javascript-ஐ புரிந்துகொள்ள முடியாவிட்டாலும், இது ஒரு பின்னூட்டம் என்பதைப் புரிந்து கொண்டு அதற்குள் உள்ளவற்றைப் புறக்கணித்து மீதி உள்ளவற்றை செயல்படுத்தும். எனவேதான் javascript நிரலானது எப்போதும் பின்னூட்டக் குறியீட்டுக்குள் கொடுக்கப்படுகிறது.

மேற்கண்ட program-ஐ browser-ல் திறக்கும் பொழுது அது பின்வருமாறு அமைகிறது.

This book will teach you about JavaScript!

## Variables

Javascript-ல் உள்ள variable-ஆனது முதல் நிலைத் தரவு வகைகளான (primitive data types) எண்கள், எழுத்துக்கள் மற்றும் ‘true’ , ‘false’ என்பது போன்ற Boolean மதிப்புகளை சேமிக்கும் வல்லமை கொண்டது. மேலும் Null மற்றும் undefined என்பது போன்ற பிற நிலைத் தரவு வகைகளையும் இது ஆதரிக்கும்.

#### Variable Declaration & Initialization

Javascript-ல் உள்ள ஒரு variable-ஆனது எழுத்துக்கள், எண்கள் மற்றும் தசம எண்கள் போன்ற அனைத்து விதமான தரவுகளையும் தானாகவே அடையாளம் கண்டு கொள்ளும். பிற மொழிகளில் குறிப்பிடுவது போன்று int, flot, string என்றெல்லாம் வெளிப்படையாகச் சொல்லத் தேவையில்லை.

உதாரணம்:

```
<html>
  <body>
    <script type = "text/javascript">
      <!--
        var salary;
        salary="25000.00";
        var age = 29, name='Nithya';
        document.write(salary,"<br/>",name,"-",age)
      //-->
    </script>
  </body>
</html>
```

ஏதோ ஒரு குறிப்பிட்ட மதிப்பினைத் (25000.00) தாங்கப் போகும் ஒரு பொதுவான வார்த்தைக்கு (salary) variable என்று பெயர். எனவே எந்த வார்த்தையை நாம் variable-ஆகப் பயன்படுத்தப் போகிறோம் என்பதை முன்கூட்டியே அறிவிக்க வேண்டும். இதுவே 'variable declaration' எனப்படும் (var salary). அவ்வாறு அறிவிக்கப்பட்ட variable-க்கு எந்த மதிப்பினை வழங்கப் போகிறோம் என்பதைக் குறிப்பிடும் செயலுக்கு 'variable initialization' என்று பெயர் (salary="25000.00). ஒரு variable-ஐ அறிவிக்கும்போதே அதற்கான மதிப்பினையும் வழங்கலாம் (var age=29). மேலும் ஒன்றுக்கும் மேற்பட்ட variable-களை ஒரே நேரத்தில் நம்மால் அறிவிக்கவும், மதிப்புகளை வழங்கவும் முடியும் (var age = 29, name='Nithya';).

document.write() என்பது அதன் அடைப்புக்குறிக்குள் கொடுக்கப்படும் விஷயங்களை வெளியிட உதவும். இங்கு அடைப்புக்குறிக்குள் (salary,"<br/>",name,"-",age) என்று கொடுக்கப்பட்டிருப்பதால், salary-ன் மதிப்பும், <br/> tag-ஆனது cursor-ஐ அடுத்த வரிக்கு அனுப்பி name-ன் மதிப்பையும், Hyphen எனும் குறியீட்டையும், age-ன் மதிப்பையும் வெளிப்படுத்தியுள்ளது.

எனவே இதன் Output பின்வருமாறு அமையும்:

```
25000.00
Nithya-29
```

**Local vs Global Variables**

அடுத்தபடியாக ஒரே variable-க்கு வெவ்வேறு வகையான மதிப்புகளை அதன் எல்லையைப் பொறுத்து நம்மால் வரையறுக்க முடியும். பின்வரும் உதாரணத்தில் salary எனும் variable-க்கு ஒரு மதிப்பினை (25000.00) அளித்துள்ளோம். பின்னர் அதே variable- ஐ ஒரு function-க்குள் பயன்படுத்தி, வேறு ஒரு மதிப்பினை (50000.00) அளித்துள்ளோம். இவ்வாறு ஒரு சிறிய எல்லையான function-க்குள் வரையறுக்கப்படும் variable-ன் மதிப்பு அதன் எல்லைக்குள்ளேயே முடிந்து விடும். இதனை நாம் "Local variables” (salary=50000.00) என்று கூறுவோம். எந்த ஒரு தனி எல்லைக்குள்ளும் இல்லாமல் பொதுவாக காணப்படுபவை " Global variables” (salary=25000.00) ஆகும்.

```
<html>
  <body onload = checkscope();>
    <script type="text/javascript">
      <!--
        var salary=25000.00;
        document.write(salary);
        function checkscope( )
        {
          var salary = "50000.00";
          document.write(salary);
        }
      //-->
    </script>
  </body>
```

```
</html>
```

இங்கு document.write() மூலம் salary-ன் மதிப்பினை வெளிப்படுத்துமாறு function-க்கு உள்ளேயும், வெளியேயும் கொடுத்துள்ளோம். ஆனால் function-க்கு உள்ளே உள்ள வரி மட்டும் செயல்படுத்தப்பட்டு 50000.00 எனும் மதிப்பினை வெளிப்படுத்தியுள்ளது. எப்போதும் ஒரே variable இருமுறை பயன்படுத்தப்பட்டிருப்பின், local-ஆக அமைக்கப்பட்ட variable-ன் மதிப்பே முதன்மை பெறும்.

```
50000.00
```

எனவே இதன் Output பின்வருமாறு அமையும்:

**Reserved Words**

ஒரு சில வார்த்தைகளை (eg: export, final, long) நம்மால் variable-ஆக அறிவிக்க முடியாது. ஏனென்றால் இது போன்ற வார்த்தைகளுக்கு என்னென்ன மதிப்புகள் என்பதை javascript-ஐ உருவாக்கியவர்களே நியமித்து விட்டனர். அவையே ‘Reserved Keywords’ எனப்படும். இதன் பட்டியல் பின்வருமாறு:

abstract
boolean
break
byte
case
catch
char
class
const
continue
debugger
default
delete
do
double

else
enum
export
extends
false
final
finally
float
for
function
goto
if
implements
import
in

instanceof
int
interface
long
native
new
null
package
private
protected
public
return
short
static
super

switch
synchronized
this
throw
throws
transient
true
try
typeof
var
void
volatile
while
with

## 3 Operators

Operator என்றால் இயக்குபவர் என்று பொருள். கொடுக்கப்பட்ட மதிப்புகளைப் பெற்றுக்கொண்டு, அதன் மீது ஒருசில செயல்பாடுகளை செலுத்தி, நமக்கு வேண்டிய தகவல்களை வெளிப்படுத்தும் வேலையை செய்பவருக்கு operator என்று பெயர். Javascript-ல் arithmetic, comparison, logical, conditional, typeof, assignment போன்ற பல்வேறு வகையான operators உள்ளன.

கீழ்க்காணும் program-ல் அனைத்து வகை operator- களின் செயல்பாடுகளும் ஒரு சேரக் கொடுக்கப்பட்டுள்ளது.

```
<html>
  <body>
    <script type="text/javascript">
      <!--
        var a = 100;
        var b = 40;

        document.write("Arithmetic - ");
        document.write(a%b);
        document.write("<br />");
```

```
        document.write("Comparison - ");
        document.write(a<b);
        document.write("<br />");

        document.write("Logical - ");
        document.write(((b<=100)&&(a>=100)));
        document.write("<br />");

        document.write("Conditional - ");
        document.write((a > b) ? a : b);
        document.write("<br />");

        document.write("typeof - ");
        document.write(typeof a=="string" ? "The value is string" : "The value
is not a string");
        document.write("<br />");

        document.write("Assignment - ");
        document.write((a -= b));
        document.write("<br />");
      //-->
    </script>
  </body>
</html>
```

இதன் Output பின்வருமாறு:

```
Arithmetic - 20
Comparison - false
Logical - true
Conditional - 100
typeof - The value is not a string
Assignment - 60
```

இப்போது மேற்கண்ட  program- க்கான விளக்கத்தையும், ஒவ்வொரு வகை operator-ன் கீழும் வரும் அனைத்து விதமான குறியீடுகளின் செயல்பாடுகளையும் பின்வருமாறு காணலாம். மேற்கண்ட அதே program-ல் document.write() எனும் வரியை மட்டும் கீழே கொடுக்கப்பட்டுள்ளவாறு மாற்றி மாற்றி இயக்கி பார்க்கவும்.

**Arithmetic Operators**

இதன் கீழ் வரும் கூட்டல், கழிதல், பெருக்கல், வகுத்தல் என்னென்ன செய்யும் என்பது உங்களுக்கே தெரியும். இதனுடன் சேர்த்து  Modulus (%), Increment( ++), Decrement (–) எனும் 3 வகை குறியீடுகள் உள்ளன. % என்பது இரண்டு எண்களை வகுத்தல் கிடைக்கும் மீதியை வெளிப்படுத்தும். ++ என்பது கொடுக்கப்பட்ட எண்ணுடன் ஒரு எண்ணைக் கூட்டியும், — என்பது கொடுக்கப்பட்ட எண்ணுடன் ஒரு எண்ணைக் கழித்தும் வெளிப்படுத்தும்.

| Arithmetic Operators | |
| --- | --- |
| document.write(a+b) | 140 |
| document.write(a-b) | 60 |
| document.write(a*b) | 4000 |
| document.write(a/b) | 2.5 |
| document.write(a%b) | 20 |
| document.write(++a) | 101 |
| document.write(--b) | 39 |

**Comparison Operators**

இரண்டு எண்களை ஒப்பிட்டு அவற்றுக்குள் எது பெரியது ( >), சிறியது (<), சமமானது (==), சமமில்லாதது (!=), என்பது போன்ற தகவல்களை வெளிப்படுத்த உதவும். (>=) என்பது சமமானது அல்லது பெரியது என்றும், (<=) என்பது சமமானது அல்லது சிறியது என்றும் பொருள்படும். இதன் வெளிப்பாடு எப்போதும் உண்மை (true), பொய் ( false) எனும் இரண்டு மதிப்புகளையே பெற்றிருக்கும்.

| Comparison Operators | |
| --- | --- |
| document.write(a == b) | FALSE |
| document.write(a!=b) | TRUE |
| document.write(a>b) | TRUE |
| document.write(a<b) | FALSE |
| document.write(a>=b) | TRUE |
| document.write(a<=b) | FALSE |

-

### Logical (or Relational) Operators

இது உண்மை, பொய் எனும் 2 மதிப்புகளை ஒப்பீடு செய்யப் பயன்படுகிறது. && ஒப்பிடப்படுகின்ற அனைத்தும் உண்மை என்பதை வெளிப்படுத்தினால் மட்டுமே, இதுவும் உண்மை என்பதை வெளிப்படுத்தும். !! ஒப்பிடப்படுபவைகளில் ஏதேனும் ஒன்றின் வெளிப்பாடு உண்மை என்று இருந்தால் கூட இதுவும் உண்மை என்பதை வெளிப்படுத்தி விடும். ! என்பது வெளிப்படும் விடை உண்மையாக இருப்பின் பொய் என்றும், பொய்யாக இருப்பின் உண்மை என்றும் மாற்றி வெளிப்படுத்தும்.

-

| Logical Operators | |
|---|---|
| document.write(((b<=100)&&(a>=100))) | TRUE |
| document.write(((b<=100)\|\|(a<=100))) | TRUE |
| document.write(!((b<=100)&&(a>=100))) | FALSE |

-

### Assignment Operators

= என்பது வலப்புறம் இருக்கும் மதிப்பினை, இடப்புறம் உள்ள variable-க்கு வழங்கிவிடும். b=40 என்று ஒரு variable காணப்படின், a=b எனக் கொடுக்கும்போது, a-ன் மதிப்பு 40 என மாறிவிடும். பின்னர் a+=b எனக் கொடுக்கும்போது, ஏற்கனவே a-ல் உள்ள 40 எனும் மதிப்பு, b-ல் உள்ள 40-வுடன் கூட்டப்பட்டு a-ன் மதிப்பு 80 என மாறிவிடும். a-=b எனக் கொடுக்கும்போது 80-லிருந்து 40 கழிக்கப்பட்டு மீண்டும் a-ன் மதிப்பு 40-க்கே வந்துவிடும். இப்போது பின்வரும் உதாரணத்தைப் பார்த்தால் உங்களாலேயே புரிந்து கொள்ள முடியும்.

| Assignment Operators | |
|---|---|
| document.write(a = b) | 40 |
| document.write(a+=b) | 80 |
| document.write(a-=b) | 40 |
| document.write(a*=b) | 1600 |
| document.write(a/=b) | 40 |
| document.write(a%=b) | 0 |

**Miscellaneous Operator**

Conditional (or ternary) Operators (a > b) ? a : b என்பது ஒரு சோதனையை செய்து, அதன் வெளீப்பாடு உண்மை என இருப்பின், ?-க்கு அடுத்து உள்ள மதிப்பினையும், பொய் என இருப்பின் அந்த மதிப்பிற்கு அடுத்து உள்ள மதிப்பினையும் வெளிப்படுத்தும்.

(typeof a==”string” ? "xxx”: "yyy”); என்பது ஒரு variable-ல் உள்ள மதிப்பின் வகையை சோதனையை செய்து, அதன் வெளீப்பாடு உண்மை என இருப்பின், ?-க்கு அடுத்து உள்ள மதிப்பினையும், பொய் என இருப்பின் அந்த மதிப்பிற்கு அடுத்து உள்ள மதிப்பினையும் வெளிப்படுத்தும்.. அதாவது ஒரு variable-ஆனது "number”, "string”, "Boolean”, "object”, "function”, "undefined” போன்ற data வகைகளுடன் ஒப்பிடப்படுகிறது.

| Miscellaneous Operators | |
|---|---|
| document.write((a > b) ? a : b) | 100 |
| document.write(typeof a=="string" ? "The value is string”: "The value is not a string"); | The value is not a string |

## Conditional statements

ஒரு variable-ல் சேமிக்கப்பட்டுள்ள மதிப்பானது பல்வேறு நிபந்தனைகளோடு ஒப்பிடப்படும். ஒவ்வொரு நிபந்தனையும் பல்வேறு வகையான நிகழ்வுகளைக் கொண்டிருக்கும். ஒப்பிடப்படுகின்ற மதிப்பானது எந்த நிபந்தனையோடு ஒத்துப்போகிறதோ, அதனுடைய நிகழ்வினை நிகழ்த்தும் செயலுக்கு If…Else மற்றும் switch_case போன்ற conditional statements பயன்படுகின்றன.

**If…Else**

பின்வரும் உதாரணத்தில் age எனும் variable-ல் உள்ள மதிப்பு 18 முதல் 21 வரை இருப்பின் "Legally fit for marriage" எனும் வாக்கியத்தையும், 21-ஐ விட அதிகமாக இருந்தால் "Legally and Medically fit" எனும் வாக்கியத்தையும், வேறு எந்த மதிப்பாக இருந்தாலும் "Not fit for marriage" எனும் வாக்கியத்தையும் வெளிப்படுத்துமாறு கொடுக்கப்பட்டுள்ளது.

ஒரு If…Else சோதனையில் எப்போதும் if, else if, else எனும் 3 வகையான சோதனைகளை கட்டாயம் கொடுக்க வேண்டும் என்று அவசியமில்லை. If மட்டுமே கொடுத்து ஒரு சோதனையுடன் நிறுத்திக்கொள்ளலாம். If-வுடன் சேர்த்து Else-ஐயும் கொடுத்து இரண்டு சோதனையுடன் நிறுத்திக்கொள்ளலாம். பல்வேறு சோதனைகளை நிகழ்த்த விரும்பினால் else if -மூலம் வேண்டிய எண்ணிக்கையில் சோதனைகளை சேர்த்துக்கொண்டேயும் செல்லலாம்.

```
<html>
  <body>
    <script type="text/javascript">
      <!--
        var age = 24;
        if((age >= 18) && (age <= 21)){document.write("Legally fit for
marriage");}
```

```
        else if( age > 21 ){document.write("Legally and Medically fit for marriage");}
        else{document.write("Not fit for marriage");}
      //-->
    </script>
  </body>
</html>
```

இதன் Output பின்வருமாறு:

Legally and Medically fit

**Switch Case**

பின்வரும் உதாரணத்தில்  switch- க்குள் ஒரு குறிப்பிட்ட மதிப்பினைத் (II) தாங்கியுள்ள variable (grade) கொடுக்கப்பட்டுள்ளது. அதன்கீழ் உள்ள case-க்குள் பல்வேறு மதிப்புகளும் அதற்கான வெளிப்பாடுகளும் கொடுக்கப்பட்டுள்ளன. Switch-க்குள் உள்ள variable-ன் மதிப்பானது  case-க்குள் உள்ள மதிப்புகளுடன் ஒப்பிடப்பட்டு, எந்த மதிப்புடன் ஒத்துப்போகிறதோ (case ‘II’), அதற்கான வெளிப்பாட்டினை ("Pretty good”) நிகழ்த்துகிறது. இந்த வகையான செயல்பாட்டிற்கு நாம் பல்வேறு  Else If கூட பயன்படுத்தலாம். இவை இரண்டிற்கும் உள்ள ஒரே ஒரு வித்தியாசம் என்னவெனில் Swtich Case-ஆனது ஒரே ஒரு variable-ன் மதிப்பினை மட்டுமே பல்வேறு மதிப்புகளுடன் ஒப்பிடும்; Else If- ஆனது ஒன்றுக்கும் மேற்பட்ட variable-களை இணைத்து பல்வேறு மதிப்புகளுடன் ஒப்பிடும்.

```
<html>
```

```
  <body>
    <script type="text/javascript">
      <!--
        var grade='II';
        switch (grade)
        {
          case 'I': document.write("Good job");break;
          case 'II': document.write("Pretty good");break;
          case 'III': document.write("Passed");break;
          case 'IV': document.write("Not so good");break;
          case 'V': document.write("Failed");break;
          default:  document.write("Grade is not valid")
        }
      //-->
    </script>
  </body>
</html>
```

இதன் Output பின்வருமாறு:

Pretty good

## 5 Looping statements

ஒரு குறிப்பிட்ட நிரல் தொகுப்பினை மீண்டும் மீண்டும் இயக்குவதற்கு while, for போன்றவை பயன்படுகின்றன. இவை இரண்டும் முதலில் ஒரு variable-ன் அடிப்படையில் condition-ஐ வலியுறுத்தும். பின்னர் அந்த condition பொய்யாகும் வரை variable- ன் மதிப்பினை ஒவ்வொன்றாக அதிகரிப்பதன் மூலம் சுழற்சியை உருவாக்குகின்றன.

**While & Do while loop**

இதில் while மற்றும் do while எனும் இரண்டு வகைகள் உள்ளன. கீழ்க்கண்ட எடுத்துக்காட்டில் x-ஆனது while-ன் செயல்பாட்டினை விளக்குவதற்கும், y-ஆனது do while-ன் செயல்பாட்டினை விளக்குவதற்கும் பயன்பட்டுள்ளது. இவை இரண்டுக்கும் முதலில் 0 எனும் மதிப்பு வழங்கப்பட்டுள்ளது.

**While loop**: இது X- ன் மதிப்பு 10-க்கும் குறைவாக இருக்கும்வரை அடைப்புக் குறிக்குள் { } உள்ளவற்றை செயல்படுத்துகிறது. முதலில் Number:0 என்பது வெளிப்படுகிறது. பின்னர் X++ என்பது x-ன் மதிப்புடன் 1-ஐ கூட்டி அடுத்த சுழற்சியைத் தூண்டுகிறது. எனவே அடுத்த சுழற்சியில், Number:1 என்பதும் வெளிப்படும். எப்போது x-ன் மதிப்பு 10-ஐ அடைகிறதோ அப்போது அடைப்புக் குறிக்குள் { } உள்ளவற்றை செயல்படுத்தாமல் சுழற்சியை நிறுத்துகிறது.

**Do while loop**: do-வைத் தொடர்ந்து என்ன செயல்படுத்த வேண்டுமோ, அதை முதலில் கொடுத்து விட வேண்டும். அதன் பின்னர் condition வலியுறுத்தப்படும். இங்கு அடைப்புக் குறிக்குள் { } உள்ளவை y- ன் மதிப்பு 5-க்கும் குறைவாக இருக்கும் வரை செயல்படுத்தப்படுகின்றன. இவை இரண்டும் பார்ப்பதற்கு ஒரே

மாதிரியாக இருந்தாலும், அதன் செயல்முறையில் வேறுபடுகின்றன.

While ஆனது முதலில் சோதனை பொருந்துகிறதா எனப் பார்த்து, பின்னர் அடைப்புக்குறிக்குள் உள்ளவற்றை செயல்படுத்துவதால் இது ‘’Entry control loop’ எனப்படும்.

Do While ஆனது அடைப்புக்குறிக்குள் உள்ளவற்றை செயல்படுத்திய பின்னரே சோதனை பொருந்துகிறதா எனப் பார்ப்பதால், இது ‘Exit control loop’ எனப்படும். எனவே Do while-ல் சோதனை பொருந்தவில்லை என்றாலும், அதனால் அடுத்த சுழற்சியை மட்டுமே தடுக்க முடியுமே தவிர, ஏற்கனவே அடைப்புக்குறிக்குள் நடந்து முடிந்த ஒன்றை தவிர்க்க இயலாது.

```
<html>
  <body>
    <script type="text/javascript">
      <!--
        var x = 0;
        var y = 0;

        while (x < 10){document.write("Number:" + x + "<br />");x++;}

        do{document.write(y);y++;} while (y < 5);
      //-->
    </script>
  </body>
</html>
```

```
Number:0
Number:1
Number:2
Number:3
Number:4
Number:5
Number:6
Number:7
Number:8
Number:9
01234
```

இதன் Output பின்வருமாறு:

## For loop

For loop- ம் while போன்றதே. இதன் வடிவம் மட்டுமே மாறுபட்டுள்ளது. ஒரே ஒரு வித்தியாசம் என்னவெனில், loop-க்குள் variable-ன் துவக்க மதிப்பு வரையறுக்கப்படுகிறது. கீழ்க்கண்ட எடுத்துக்காட்டில் for loop- ஆனது x-ன் மதிப்பு 0 என்றும், அது 10-க்கும் குறைவாக (x<10) இருக்கும் வரை அடைப்புக் குறிக்குள் { } உள்ளவற்றை செயல்படுத்த வேண்டும் எனவும், ஒவ்வொரு முறையும் துவக்க மதிப்புடன் 1 கூட்டப்பட வேண்டும் (x++) எனவும் கூறுகிறது.

For…In என்பது for loop-ன் மற்றொரு வகை. இது variable-ஐ ஒரு object-ன் வழியே செலுத்தி அதன் அனைத்து பண்புகளையும் ஒவ்வொன்றாக வெளிக்காட்ட உதவுகிறது. X எனும் variable- ஐ கீழ்க்கண்டவாறு navigator எனும் object வழியே செலுத்தும்போது அது அதன் அனைத்து பண்புகளையும் ஒவ்வொன்றாக வெளிப்படுத்துவதைக்
காணலாம்.

```
<html>
  <body>
    <script type="text/javascript">
      <!--
        var x;

        for(x = 0; x < 10; x++){document.write(x);}

        document.write("<br />");

        for (x in navigator) {document.write(x+"<br />");}
      //-->
```

```
    </script>
  </body>
</html>
```



இதன் Output பின்வருமாறு:

```
0123456789
vendorSub
productSub
vendor
maxTouchPoints
hardwareConcurrency
appCodeName
appName
appVersion
platform
product
userAgent
language
languages
onLine
cookieEnabled
doNotTrack
geolocation
mediaDevices
plugins
mimeTypes
webkitTemporaryStorage
webkitPersistentStorage
serviceWorker
getBattery
sendBeacon
requestMediaKeySystemAccess
getGamepads
```

## Break…Continue

ஒரு சுழற்சி நடந்துகொண்டிருக்கும்போது, இடையில் ஒரு குறிப்பிட்ட சுழற்சி எண்ணின் போது அச்சுழற்சியிலிருந்து மொத்தமாக வெளியேறுவதற்கு break-ம், அச்சுழற்சி எண்ணின் போது மட்டும் அடைப்புக்குறிக்குள் உள்ளவற்றைத் தவிர்த்து, அடுத்த சுழற்சி எண்ணிலிருந்து ஆரம்பிப்பதற்கு continue-ம் பயன்படுகின்றன. Continue- வை பயன்படுத்துவதற்கு சுலபமாக, ஒன்றுக்கும் மேற்பட்ட சுழற்சிகள் காணப்படின், ஒரு குறிப்பிட்ட சுழற்சியின் அருகில் அமைக்கப்படும் identifier-தான் Labels ஆகும்.

கீழ்க்கண்ட எடுத்துக்காட்டில் x-ஆனது break-ன் செயல்பாட்டினை விளக்குவதற்கும், y-ஆனது continue-ன் செயல்பாட்டினை விளக்குவதற்கும் பயன்பட்டுள்ளது. Heading: என்பது ஆகும். x, y இரண்டுக்கும் முதலில் 0 எனும் மதிப்பு வழங்கப்பட்டுள்ளது.

**Break**: x- ன் மதிப்பு 10-க்கும் குறைவாக இருக்கும் வரை அடைப்புக் குறிக்குள் { }
உள்ளவற்றை செயல்படுத்துமாறு ஒரு while loop அமைக்கப்பட்டுள்ளது. இதில் x-ன் மதிப்பானது 5 எனும் சுழற்சி எண்ணை அடையும்போது சுழற்சியை விட்டு வெளியேதும் வகையில் if (x == 5){break;} எனும் வாக்கியம் கொடுக்கப்பட்டுள்ளது.

**Continue**: y- ன் மதிப்பு 10-க்கும் குறைவாக இருக்கும் வரை அடைப்புக் குறிக்குள் { }
உள்ளவற்றை செயல்படுத்துமாறு ஒரு while loop அமைக்கப்பட்டுள்ளது. இதில் y-ன் மதிப்பானது 5 எனும் சுழற்சி எண்ணை அடையும்போது மட்டும் if (y == 5){continue;}, அடைப்புக்குறிக்குள் உள்ளவற்றை செயல்படுத்தாமல் loop-ன் தொடக்கத்தை சென்றடைந்து அடுத்த சுழற்சி எண்ணிலிருந்து சுழல ஆரம்பிக்கிறது.

**Labels**: i-ன் மதிப்பு 3-க்கும் குறைவாக இருக்கும் வரை வெளிப்புற loop சுழலும்படியும், அதற்குள் உள்ள j-ன் மதிப்பு 5-க்கும் குறைவாக இருக்கும் வரை உட்புற loop சுழலும்படியும் 2 for loops அமைக்கப்பட்டுள்ளன. உட்புற loop-ல் j-ன் மதிப்பு 3-ஐ அடையும்போது Heading எனும் பெயர் கொண்ட label உள்ள இடத்திற்குச் செல்லுமாறு ஒரு வரி if (j == 3){continue Heading;} கொடுக்கப்பட்டுள்ளது. இந்த Heading: வெளிப்புற loop-ன் துவக்கத்தில் கொடுக்கப்பட்டிருப்பதால், அங்கிருந்து சுழற்சி எண் 3- க்கான சுழற்சியை ஆரம்பிக்கும். ஆனால் (i<3) எனும் சோதனைக்குள் அடங்காததால், இங்கு சுழற்சி முடிக்கப்பட்டுள்ளது.

```
<html>
  <body>
    <script type="text/javascript">
      <!--
      var x = 1;
      var y = 1;
      while (x < 10)
      {
        if (x == 5){break;}
        x = x + 1;
        document.write( x + "<br />");
      }

      document.write("<br />");

      while (y < 10)
      {
        y = y + 1;

        if (y == 5){continue;}
```

```
          document.write(y);
        }

        document.write("<br />");

        Heading:

        for (var i = 0; i < 3; i++)
        {
          document.write(i + "times" + "<br />");
          for (var j = 0; j < 5; j++)
          {
            if (j == 3){continue Heading;}
            document.write("Value is: " + j + "<br />");
          }
        }
        //-->
      </script>
   </body>
</html>
```

இதன் Output பின்வருமாறு:

2
3
4
5

234678910
0times
Value is: 0
Value is: 1
Value is: 2
1times
Value is: 0
Value is: 1
Value is: 2
2times
Value is: 0
Value is: 1
Value is: 2

## Functions & Events

Functions என்பது மறுபயன்பாட்டிற்கு உதவும் வகையில் எழுதப்படுகின்ற நிரல்கள் ஆகும். ஒரு மிகப்பெரிய program- ஐ நாம் எழுதிக் கொண்டிருக்கும்போது ஒருசில குறிப்பிட்ட நிரல்களை மட்டும் நமது தேவைக்கேற்ப நாம் மீண்டும் மீண்டும் பயன்படுத்த வேண்டியிருக்கும். அப்படிப்பட்ட நிரல்களை ஒரு பொதுவான பெயர் வைத்து சேமித்துக்கொள்ள functions பயன்படுகிறது. சுருக்கமாகச் சொல்லப்போனால், ஒரு மிகப்பெரிய program-ஐ சிறுசிறு பகுதிகளாகப் பிரித்துக்கையாளுவதற்கு functions பயன்படுகிறது.

இதை parameters ஏற்றுக்கொண்டு செயல்படுபவை, parameters இல்லாமல் செயல்படுபவை என்று இரண்டாகப் பிரிக்கலாம். பின்வரும் எடுத்துக்காட்டில் sayHello() என்பது parameters இல்லாமல் செயல்படும் function-க்கு உதாரணமாகவும், concatenate() என்பது parameters வைத்து செயல்படும் function-க்கு உதாரணமாகவும் விளங்குகிறது.

```
<html>
  <head>
    <script type="text/javascript">
      function sayHello()
      {
        document.write ("Hello Buddy! Welcome!");
      }

      function concatenate(fn, ln)
      {
        var name;
        name = fn + ln;
```

```
            return name;
         }

         function fullname()
         {
            var c;
            c = concatenate('Malathi', 'Sivakumar');
            document.write (c );
         }
      </script>
   </head>

   <body>
      <form>
         <input type="button" onclick="sayHello()" value="Greetings">
         <input type="button" onclick="fullname()" value="Click Here">
      </form>
   </body>

</html>
```

இதன் Output பின்வருமாறு:



Hello Buddy! Welcome!    MalathiSivakumar

**Functions without parameters**

sayHello() எனும் பெயரில் சேமிக்கப்பட்ட function, "Hello Buddy! Welcome!" எனும் வரியினை வெளிப்படுத்தும் வேலையை செய்கிறது. பின்னர் ‘Greetings’ எனும் பெயர் கொண்ட பொத்தானை சொடுக்கும்போது, இந்த function அழைக்கப்படும் வகையில் body-க்குள் ஒரு HTML code கொடுக்கப்பட்டுள்ளது. இது parameter இல்லாமல் அழைக்கப்படும் function-க்கு உதாரணம் ஆகும்.

**Functions with parameters**

"Click Here" எனும் பொத்தானை சொடுக்கும்போது, fullname() எனும் function அழைக்கப்படுவதற்கான code ஒன்று body-க்குள் உள்ளது. fullname()-க்குள் c எனும் ஒரு variable-வரையறுக்கப்பட்டு அதில், concatenate() function வெளிப்படுத்தும் மதிப்பு சேமிக்கப்படுகிறது. இந்த concatenate()தான் parameters-ஐ ஏற்றுக்கொண்டு செயல்படும் function-க்கு உதாரணம் ஆகும்.

அதாவது c = concatenate('Malathi', 'Sivakumar') எனக் கொடுப்பதன் மூலம், அடைப்புக்குறிக்குள் உள்ள மதிப்புகள் concatenate(fn, ln) என்று வரையறுக்கப்பட்டுள்ள function-க்குள் உள்ளீடு மதிப்புகளாகச் சென்று அவற்றுக்குள் உள்ளவற்றைச் செயல்படுத்தும்.

concatenate(fn, ln)-க்குள் name எனும் ஒரு variable-வரையறுக்கப்பட்டு அதில், fn, ln வழியே செலுத்தப்பட்ட 2 தனித்தனி மதிப்புகள் இணைக்கப்பட்டு MalathiSivakumar எனும் ஒரே மதிப்பாக சேமிக்கப்படும். பின்னர் இந்த மதிப்பு சேமிக்கப்பட்டுள்ள name எனும் variable, return keyword மூலம் வெளியே அனுப்பப்படுகிறது. இவ்வாறு வெளியே வந்துள்ள இந்த மதிப்பே c எனும் variable-ல் சேமிக்கப்பட்டு வெளிப்படுத்தப்படுகிறது.

**Events**

ஒரு விஷயம் browser-ல் நடப்பதற்கு நாம் செய்யும் ஒவ்வொன்றும் Events எனப்படும். ஒரு பொத்தானை சொடுக்குவது, Mouse-ஐ நகர்த்துவது, Page-ஐ load செய்வது போன்ற ஒவ்வொன்றும் ஒவ்வொரு Events ஆகும்.

மேற்கண்ட அதே Program- ஐ நாம் Events-க்கும் எடுத்துக்கொள்ளலாம். அதில் onclick என்பது ஒரு event. அதையே onmouseover, onmouseout எனும் events கொண்டு மாற்றி இயக்கிப் பார்க்கவும்.

```
<html>

  <head>
    <script type="text/javascript">
      function sayHello()
      {
        document.write ("Hello Buddy! Welcome!");
      }

      function concatenate(fn, ln)
      {
        var name;
        name = fn + ln;
        return name;
      }

      function fullname()
      {
        var c;
```

```
        c = concatenate('Malathi', 'Sivakumar');
        document.write (c );
      }
    </script>
  </head>

  <body>
    <form>
      <input type="button" onmouseover="sayHello()" value="Greetings">
      <input type="button" onmouseout="fullname()" value="Click Here">
    </form>
  </body>

</html>
```

onmouseover=”sayHello()”எனும்போது "Greetings” பொத்தானின் அருகில் mouse-ஐ கொண்டு செல்லும் போதே  sayHello() இயக்கப்பட்டுவிடும்.

onmouseout=”fullname()”எனும்போது "Click Here” பொத்தானின் அருகில் mouse-ஐ கொண்டு செல்லும் போது எதுவும் நிகழாது. ஆனால் அங்கிருந்து mouse-ஐ வெளியே நகர்த்தும்போது  sayHello() இயக்கப்பட்டுவிடும்.

## 7 Window-□□□□ □□□□□□□□□

window எனும் object-ன் ஒருசில பண்புகளைப் பயன்படுத்தி நாம் செய்யும் வேலைகளைப் பின்வருமாறு காணலாம்.

**location**

ஒரு வலைத்தளத்தை நாம் பயன்படுத்திக் கொண்டிருக்கும்போது, திடீரென்று ‘Home’ எனும் பொத்தானை அழுத்தி, அதன் முதல் பக்கத்திற்குச் செல்வோம் அல்லவா, இதற்காக window.location எனும் பண்பு பயன்படுகிறது. அதாவது browser-ன் எந்தப் பக்கத்தில் பயனர் இருந்தாலும், ஒரு பொத்தானை அழுத்தினால், ஒரு குறிப்பிட்ட url-க்குச் செல்லுமாறு அமைக்க இந்தப் பண்பு பயன்படுகிறது.

கீழ்க்கண்ட எடுத்துக்கத்தில், window.location-ன் மதிப்பு [www.kaniyam.com](http://www.kaniyam.com) என்று கொடுக்கப்பட்டுள்ளது. பின்னர் ‘Redirect Me’ எனும் பொத்தானை சொடுக்கும்போது, இது செயல்படும் வகையில் ஒரு HTML code கொடுக்கப்பட்டுள்ளது.எனவே வலைத்தளப் பக்கத்தில் ‘Redirect Me’ எனும் பொத்தானை எங்கு வைத்தாலும், அந்தப் பொத்தானை அழுத்தும் போது, அது [www.kaniyam.com](http://www.kaniyam.com) எனும் முகவரிக்குச் சென்று விடும். இது "Page Redirection” எனப்படும்.

```
<html>

  <head>

    <script type="text/javascript">
```

```
        <!--
          function Redirect()
          {
             window.location="http://www.kaniyam.com";
          }
        //-->
     </script>

  </head>

  <body>

     <form>
        <input type="button" onclick="Redirect()" value="Redirect Me">
     </form>

  </body>

</html>
```








இதன் Output பின்வருமாறு:

**Print**

window.print() என்பது தற்போதைய வலைப் பக்கத்தை அச்சிட உதவும் ஒரு print window-வை உருவாக்கும். கீழ்க்கண்ட program-ல் "Click here for printing" எனும் பெயர் கொண்ட ஒரு பொத்தானை சொடுக்கும்போது இத்தகைய window-வை உருவாக்கும் வகையில் ஒரு html code கொடுக்கப்பட்டுள்ளது.

```
<html>
  <body>
    <form>
      <input type="button" onclick="window.print()" value="Click here for
```

| printing"> |
| --- |
| </form> |
| </body> |
| </html> |

| Click here for printing |
| --- |

இதன் Output பின்வருமாறு:



## Dialog Boxes

Javascript-ல் 3 முக்கியமான பெட்டிகள் உள்ளன. அவற்றைக் கீழ்க்காணும் எடுத்துக்காட்டில் காணலாம்.

- "Alert box” எனும் பெயர் கொண்ட பொத்தானின் மீது சொடுக்கும்போது "This is a warning message!” எனும் செய்தி வெளிப்படும் வகையில் ஒரு பெட்டி உருவாக்கப்பட்டுள்ளது. இது பயனர்களை எச்சரிக்க உதவும் alert() பெட்டி ஆகும்.

- "Confirm box” எனும் பெயர் கொண்ட பொத்தானின் மீது சொடுக்கும்போது "Do you want to continue?” என்ற ஒரு கேள்வியைக் கேட்டு, அதற்கு ஆம்/இல்லை என்று நாம் பதிலளிக்கும் வகையில் ஒரு பெட்டி உருவாக்கப்பட்டுள்ளது. இது confirm() பெட்டி எனப்படும்.

- "prompt box” எனும் பெயர் கொண்ட பொத்தானின் மீது சொடுக்கும்போது "Please enter your name:” எனக் கூறி அதற்கு நாம் அளிக்கும் விடையைப் பெற்றுக்கொள்ளும் வகையில் ஒரு பெட்டி உருவாக்கப்பட்டுள்ளது. இது பயனர்கள் கொடுக்கும் விவரங்களை உள்ளீடாகப் பெற்றுக்கொண்டு, அதற்கேற்ப செயல்படும் prompt() பெட்டி ஆகும்.

```
<html>
  <head>
    <script type="text/javascript">
      <!--
        function box1()
        {
          alert ("This is a warning message!");
```

```
          }
          function box2()
          {
            var x = confirm("Do you want to continue ?");
            if( x == true ){document.write ("User wants to continue!");}
            else{document.write ("User does not want to continue!");}
          }
          function box3()
          {
            var x = prompt("Please enter your name : ", "your name goes here");
            document.write("Hello! Welcome " + x);
          }
        //-->
      </script>
    </head>

    <body>
      <form>
        <input type="button" onclick="box1()" value="Alert box">
        <input type="button" onclick="box2()" value="Confirm box">
        <input type="button" onclick="box3()" value="prompt box">
      </form>
    </body>
</html>
```

இதன் வெளிப்பாடு பின்வருமாறு:

Alert box | Confirm box | prompt box

**alert():**

பயனர்களை எச்சரிக்கும் வகையில் ஒரு பெட்டியை திரையில் வெளிப்படுத்த alert() box பயன்படும். இந்த alert()-க்குள் கொடுக்கப்படும் செய்தியானது ("This is a warning message!") திரையில் வெளிப்படும் பெட்டிக்குள் எச்சரிப்பு செய்தியாக




இருக்கும். பெட்டிக்குள் உள்ள OK பொத்தானின் மீது சொடுக்கினால் அந்த எச்சரிப்பு செய்தி மறைந்துவிடும்.

**confirm():**

பயனர்களிடமிருந்து ஒரு முறைக்கு இருமுறை உறுதியைப் பெற்றுக்கொள்ளும் வகையில் ஒரு பெட்டியை திரையில் வெளிப்படுத்த confirm() box பயன்படும். ஏனெனில் முதல்முறை தவறுதலாகச் சொடுக்கியிருந்தாலும் கூட இந்தப் பெட்டியைப் பார்த்துவிட்டு பின்வாங்கிச் செல்ல இது வாய்ப்பளிக்கும். எனவே இந்தப் பெட்டி OK மற்றும் Cancel எனும் இரண்டு பொத்தான்களுடன் காணப்படும். OK-வை true எனவும், Cancel-ஐ false எனவும் இது எடுத்துக்கொள்ளும். ஆகவே true-ஆக இருந்தால் என்ன செய்ய வேண்டும், false-ஆக இருந்தால் என்ன செய்ய வேண்டும் என்பதையும் நம்மால் If condition மூலம் வரையறுக்க முடியும்.




User wants to continue!

**prompt():**

Prompt() box- ஆனது நம்மிடம் ஒரு கேள்வியை எழுப்பி, அதற்கான பதிலை நம்மிடமிருந்து பெற்றுக்கொண்டு, பின்னர் அதற்கேற்ற வகையில் செயல்படும் தன்மை கொண்டது. எனவே இது வெளிப்படுத்துகின்ற பெட்டிக்குள் ஒரு கேள்வியும், ஒரு input box-ம் காணப்படும். கேள்வியாக என்ன வெளிப்பட வேண்டும், input box-ல் என்ன தென்பட வேண்டும் என்பதையெல்லாம், prompt()-க்குள் நாம் வரையறுத்து விடலாம்.



This page says:

Please enter your name :

Aarthi Irudhayaraj

OK Cancel

Hello! Welcome Aarthi Irudhayaraj

## 9 Exception Handling

try { } என்பது அதன் எல்லைக்குள் உள்ள நிரலில் ஏதேனும் தவறு இருந்தால், அது என்ன தவறு எனும் செய்தியை வெளிப்படுத்தும். catch { } என்பது வெளிப்படுகின்ற செய்தியை பெற்றுக்கொண்டு அதை பயனருக்குத் தெரிவிக்க உதவும்.

கீழ்க்கண்ட உதாரணத்தில் Example1 எனும் பொத்தானின் மீது சொடுக்கும்போது one() எனும் function-ம், Example2 எனும் பொத்தானின் மீது சொடுக்கும்போது two() எனும் function-ம் இயக்கப்படும் விதத்தில் நிரல் எழுதப்பட்டுள்ளது.

```
<html>

  <head>
    <script type="text/javascript">
      <!--
        function one()
        {
          var y = 0;
          try {document.write(x);}
          catch (e) {document.write(e+"</br>");}

          try
          {
```

```
            if (y==0) {throw( "Variable should not hold zero" ); }
          }
          catch (e) {document.write(e+"</br>");}

          finally {document.write("Execution Completed" );}
        }
        window.onerror = function (a,b,c)
        {
          alert(a);
          alert(b);
          alert(c);
        }
      //-->
    </script>
  </head>

  <body>
    <form>
      <input type="button" onclick="one()" value="Example1">
      <input type="button" onclick="two()" value="Example2">
    </form>
  </body>

</html>
```

view rawtry_catch.html hosted with by GitHub

இதன் வெளிப்பாடு  பின்வருமாறு:




function one()-க்குள் y எனும் variable வரையறுக்கப்பட்டுள்ளது. ஆனால் x -ன் மதிப்பினை வெளியிடுமாறு அடுத்த வரியில் உள்ளது. இந்த x -ஆனது எங்குமே வரையறுக்கப்படாத  காரணத்தினால் இது error-ஐ வெளிப்படுத்தி program இயங்குவதை பாதியில் நிறுத்திவிடும். இவ்வாறு நிகழாமல் தடுப்பதற்காகவே x -ன் மதிப்பினை வெளியிடுமாறு உள்ள வரி try{ } -க்குள் கொடுக்கப்பட்டுள்ளது. எனவே ஏதேனும் தவறு நிகழ்ந்தால் கூட அது ஒரு செய்தியாகவே வெளிப்படுமே தவிர, program இயங்குவதற்கு எந்த ஒரு தடையும் இருக்காது.

அடுத்த வரியில் catch (e) எனக் கொடுப்பதன் மூலம் வெளிப்படுகின்ற செய்தியை e எனும் variable மூலம் பெற்றுக்கொண்டு பின்னர் அந்த செய்தியை {document.write(e+”</br>”)} என்பதன் மூலம் வெளிப்படுத்தியுள்ளது. இது பின்வருமாறு.

ReferenceError: x is not defined

இதுபோன்ற Reference error எல்லாம் javascript-ஆல் ஏற்கனவே வரையறுக்கப்பட்ட தவறு வகைகள். சில சமயங்களில் நமது தேவைக்கேற்ப நாமே தவறுகளை வரையறுத்து அதனை சுட்டிக்காட்ட விரும்பினால் throw() பயன்படும்.

அடுத்து கொடுக்கப்பட்டுள்ள try{} block- க்குள் y-ன் மதிப்பு 0 என இருந்தால் "Variable should not hold zero” எனும் error-ஐ வெளிப்படுத்துமாறு throw()-க்குள் கொடுக்கப்பட்டுள்ளது. பின்னர் அந்த error, catch { } மூலம் பெறப்பட்டு

வெளிப்படுத்தப்பட்டுள்ளது.  இது பின்வருமாறு.

Variable should not hold zero

Finally { } எனும் blocks-க்குள் கொடுக்கப்பட்டுள்ளவை அனைத்தும் errors வந்தாலும் வராவிட்டாலும் கண்டிப்பாக ஒருமுறை  execute செய்யப்பட்டு விடும். இது பின்வருமாறு.

Execution Completed

Function one() – ன் செயல்பாடுகள் முடிந்தவுடன் window.onerror = function (a,b,c) என்று கொடுக்கப்பட்டுள்ளது. அதாவது Example2 பொத்தானின் மீது சொடுக்கும்போது, two() எனும் function, எங்குமே வரையறுக்கப்படாத காரணத்தால் windows- ஆனது error-ஐ வெளிப்படுத்தும். windows.onerror எனும் method, error-ஐ கைப்பற்றி அதனை Error message, url, Line number போன்ற 3 நிலைகளில் சேமிக்கும். இதனை a,b,c போன்ற parameters மூலம் function-க்குள் செலுத்தி alert() மூலமோ அல்லது document.write() மூலமோ வெளிப்படுத்தலாம். இது பின்வருமாறு.

**Error Message:**




**URL:**




**Line Number:**



## □□□□□□□□□ □□□□□□□□□□□

ஒரு விண்ணப்பப் படிவத்தை நாம் பூர்த்தி செய்துவிட்டு Submit பொத்தானை சொடுக்கினால், உலாவியானது நாம் கொடுத்த விவரங்களை server-க்கு அனுப்புவதற்கு முன்னர், எல்லாம் சரியாக உள்ளதா எனச் சோதிக்கும். ஏதாவது விவரங்களை நாம் கொடுக்கத் தவறியிருந்தாலோ அல்லது தவறுதலாகக் கொடுத்திருந்தாலோ, உலாவியானது ஒரு popup மூலம் அதனை நமக்குத் தெரியப்படுத்தும். சரியான விவரங்களைக் கொடுத்து முழுவதுமாக படிவத்தைப் பூர்த்தி செய்யும்வரை, எந்த ஒரு விவரத்தையும் server-க்கு அனுப்பாது. இதுவே Client side validations எனப்படும். இதனை Javascript எவ்வாறு செய்கிறது என்பதைப் பின்வருமாறு காணலாம்.

கீழ்க்கண்ட உதாரணத்தில் Name, Email, Zip Code எனும் உள்ளீட்டுப் பெட்டிகளும், Country எனும் கீழிறக்கப் பெட்டியும், submit எனும் பொத்தானும் உருவாக்கப்பட்டுள்ளன. இப்போது submit எனும் பொத்தானின் மீது சொடுக்கும்போது, ஒவ்வொரு பெட்டிக்கும் நிகழ வேண்டிய அனைத்து விதமான சோதனைகளும் validate () எனும் ஒரே function-க்குள் கொடுக்கப்பட்டுள்ளன. இந்த அனைத்து சோதனைகளும் வெற்றிகரமாக நடத்தி முடிக்கப்பட்ட பின்னரே இந்த validate()-ஆனது return (true) என்பதனை தெரிவித்து, அடுத்து நடக்க வேண்டிய விஷயத்திற்கே செல்லும். இதில் ஏதேனும் ஒரு சோதனையில் பயனர்கள் அளித்த விவரம் ஒழுங்காக இல்லை என்று கண்டுபிடிக்கப்பட்டுவிட்டால் கூட return(false) எனக் கொடுத்து அடுத்து எதையும் நடக்க விடாது.

```
<html>
  <head>
    <script type="text/javascript">
      <!--
        function validate()
        {
          if( document.myForm.Name.value == "" )
          {
```

```
            alert( "Please provide your name!" );
            document.myForm.Name.focus() ;
            return false;
          }

          var emailID = document.myForm.EMail.value;
          var reg = /^([A-Za-z0-9_\-\.])+\@([A-Za-z0-9_\-\.])+\.([A-Za-z]
{2,4})$/;
          if (reg.test(emailID) == false)
          {
            alert("Please enter correct email ID")
            document.myForm.EMail.focus() ;
            return false;
          }

          if( document.myForm.Zip.value == "" ||
          isNaN( document.myForm.Zip.value ) ||
          document.myForm.Zip.value.length != 5 )
          {
            alert( "Please provide a zip in the format #####." );






            document.myForm.Zip.focus() ;
            return false;
          }
```

```
         if( document.myForm.Country.value == "-1" )
         {
           alert( "Please provide your country!" );
           return false;
         }

         return( true );
       }
     //-->

   </script>
 </head>

 <body>
   <form action="/cgi-bin/test.cgi" name="myForm"
onsubmit="return(validate());">
     <table cellspacing="2" cellpadding="2" border="1">

       <tr>
         <td align="right">Name</td>
         <td><input type="text" name="Name" /></td>
       </tr>

       <tr>
         <td align="right">EMail</td>
         <td><input type="text" name="EMail" /></td>
```

